ॐ



# எங்கும் நிறைந்த கடவுள்

# THE IMMANENCE OF GOD

ईशावास्यमिदँ सर्वं यत्किञ्च जगत्यां जगत् ।

तेन त्यक्तेन भुञ्जीथा मा गृधः कस्यस्विद्धनम् ॥



மதன் மோஹன் மாளவியா

ஓம்

# எங்கும் நிறைந்த கடவுள்

வேதங்கள் உலகில் மிகப் பழம்பெரும் இலக்கியக் களஞ்சியங்கள். ருக்வேதம் நாலாயிரம் ஆண்டுகள் வயதுடைத்து எனவும், உலக வாசகசாலைகளில் அதனினும் பழமை பொருந்திய வேறு இலக்கியம் காண்டல் அரிது என்றும் மேனாட்டறிஞரே ஒப்புக் கொள்கின்றனர். இப் பிரபஞ்சத்தின்கண் முன்னர் எங்கும் இருள் பரந்திருந்ததென ருக்வேதம் இயம்புகின்றது. அவ்விருளின் இடையே, அதற்கும் அப்பால், தானே தனியனாய் அப்பரம் பொருள் இயங்கி இருந்தான். அவன் ஞான வடிவன், சுயம்புவானவன். அம் மாபெரும் இருட் பிழம்பினின்றும் அரும்பித் தன் ஞானசக்தி யென்னும் தவத்தின் பேருதவியால் இப்பரந்த பிரபஞ்சத்தைப் படைத்தருளினான். ருக்வேதம் இசைக்கின்றது :—

तम आसीत्तमसा गूळहमग्रे-
ऽप्रकेतं सलिलं सर्वमा इदम् ।
तुच्छ्येनाभ्यपिहितं यदासीत्
तपसस्तन्महिनाजायतैकम् ॥ (8-7-17-3)

மகா மனுவும் இதே கருத்தை நவின்றனர். இப் பிரபஞ்சத்தைப் பிறப்பிக்கு முன்னர் இருளன்றி வேறு இருக்க' வில்லை என்று கூறினர். யாவும் உறக்க நிலை யெய்தி இருந்தன, அவ்விருட் பிழம்பினின்றும் ஞானமயமும் ஒளிமயமும் தோன்றின; அதனின்றும், தன்னைத் தானே தோற்றுவித்தவனும் தன் தோற்றத்திற்கு எப்பொருளின்

சார்பையும் வேண்டாதவனும், எஞ்ஞான்றும் தன் மகிமையிலேயே அரும்புபவனுமாகிய அப் பரம்பொருள் எழுந்தனன். அவன் தானே தன்னைத் தோற்றுவித்ததுமே அவ்விருள்த் திரை விலகிற்று. மனுஸ்மிருதியில் கூறியுள்ளது காண்க :—

आसीदिदं तमोभूतमप्रज्ञातमलक्षणम् ।
अप्रतर्क्यमविज्ञेयं प्रसुप्तमिव सर्वतः ॥
ततः स्वयम्भूर्भगवानव्यक्तो व्यञ्जयन्निदम् ।
महाभूतादिवृत्तौजाः प्रादुरासीत्तमोनुदः ॥
योऽसावतीन्द्रियग्राह्यः सूक्ष्मोऽव्यक्तः सनातनः ।
सर्वभूतमयोऽचिन्त्यः स एव स्वयमुद्बभौ ॥ (1-5-7)

"ஊழியழிவின் போது இப் பிரபஞ்சம் இருளில் மூழ்கிற்று. அது பாகுபடுத்த முடியாத, வரையறுக்க இயலாத, எண்ணுதற்கரிய, உணர்தற்கரிய குழப்ப நிலையில் இருந்தது ; அது உறக்க நிலையில் கிடந்தது. அக் கால முடிவில் தானே தன்னைத் தோற்றுவித்தவனும், பரம்பொருளானவனும், காட்சிக் கரியவனும் ஆகிய கடவுள் இப் பிரபஞ்சத்தை அருள்கூர்ந்து படைத்தான் ; இவ்விதமாகத் தன் சிருஷ்டிச்சக்தியைப் புலப்படச் செய்தனன் ; இருள்த்திரையை விலக்கிய பின்னர் தன்னை வெளிப்படுத்திக் கொண்ட அவன் புலன்களுக் கெட்டாதவன் ; தானே ஒளிர்கின்றவன் அக் கடவுள்."

மீண்டும் ருக்வேதம் கூறுகின்றது :—

हिरण्यगर्भः समवर्तताग्रे
भूतस्य जातः पतिरेक आसीत् ।
स दाधार पृथिवीं द्यामुतेमां
कस्मै देवाय हविषा विधेम ॥

20-5

य इमा विश्वा भुवनानि जुह्व-
दृषिर्होता न्यसीदत् पिता नः।
स आशिषा द्रविणमिच्छमानः
प्रथमच्छदवरां आविवेश ॥
विश्वतश्चक्षुरुत विश्वतोमुखो
विश्वतोबाहुरुत विश्वतस्पात्।
सं बाहुभ्यां धमति सं पतत्रै-
र्द्यावाभूमी जनयन् देव एकः ॥
यो नः पिता जनिया यो विधाता
धामानि वेद भुवनानि विश्वा।
यो देवानां नामधा एक एव
तं संप्रश्नं भुवना यन्त्यन्या ॥

*இஃது மற்ருேர் சுருதி :—*

आत्मा वा इदमेक एवाग्र आसीत्।
एकमेवाद्वितीयम्।

*பாகவத புராணத்தில் பகவான் கூறுகின்ருர் :—*

अहमेवासमेवाग्रे नान्यद्यत् सदसत्परम्।
पश्चादहं यदेतच्च योऽवशिष्येत सोऽस्म्यहम् ॥ (2-9-32)

*"தோற்றத்தின் தொடக்கத்திலே யான் ஒருவனே இருந்தேன்; காண்பன, காணுதன யாவற்றிற்கும் அப் பாற்பட்டவனுக யான் ஒருவனே இருந்தேன்; வேருென் றும் இருந்ததில்லை. ஊழிப்போழிவில் இப் பிரபஞ்சத்தில் தப்புகின்றவன் யான் ஒருவனே. காணும் விசும்பு என் வடிவமே. பிரபஞ்ச அழிவின் பின்னர் எஞ்சுவதும் யானே."*

சிவ புராணத்தின் ஓர் சுலோகம் ஈண்டு காண்க:—

एक एव तदा रुद्रो न द्वितीयोऽस्ति कश्चन ।
संसृज्य विश्वं भुवनं गोप्तान्ते संचुकोच सः ॥
विश्वतश्चक्षुरेवायमुतायं विश्वतोमुखः ।
तथैव विश्वतोबाहुर्विश्वतः पादसंयुतः ॥
द्यावाभूमी च जनयन् देव एको महेश्वरः ।
स एव सर्वदेवानां प्रभवश्चोद्भवस्तथा ॥
अचक्षुरपि यः पश्यत्यकर्णोऽपि शृणोति यः ।
सर्वं वेत्ति न वेत्तास्य तमाहुः पुरुषं परम् ॥

"அஞ்ஞான்று ருத்திரன் ஒருவனே இருந்தனன். இவ்வுலகம் யாவையும் காக்கும் ஆற்றல் படைத்த அவன் தாமே அதை உருவாக்கி, அவற்றின் நிலை பொறுத்தி இறுதியிலே அழித்தலும் செய்தனன். எங்கும் அவன் கண்களே, எம் மருங்கும் அவன் திரு முகங்களே, எத்திசையிலும் அவன் திருக் கரங்களே, திருவடிகளே உள்ளன. சிவபெருமானே மண்ணையும், விண்ணையும் படைத் தருளினன். கடவுளர் அனைவருக்கும் அவனே மூலமும், ஊற்றும் ஆவான். அவன் கண்ணின்றிக் காண்கின்றவன், காதின்றிக் கேட்பவன். யாரும் அவனை அறியார், எனினும் யாதும் அவன் அறிகின்றான். அவனே பரம் பொருள்."

மேலும் பாகவதம் சொல்கின்றது:—

एकस्त्वमात्मा पुरुषः पुराणः
सत्यः स्वयंज्योतिरनन्त आद्यः ।
नित्योऽक्षरोऽजस्रसुखो निरञ्जनः
पूर्णोऽद्वयो मुक्त उपाधितोऽमृतः ॥ (10-14-23)

"அவனே ஆன்மா, நிலை பெற்ற பொருள்; உண்மை யிருப்புடையவன், தன்னொளி வாய்ந்தவன், வரம் பெற்ற வன், எப்பொருட்கும் மூல காரணன், அழிவற்றவன், என்றும் இன்புற்றவன், மயக்கம் துறப்பவன்; தன்னிறை வினன், ஒப்பற்றவன்; பூரணன், சாகாதவன்."

இக் கருத்து வேதங்களுக்கும், ஸ்மிருதிகளுக்கும், புராணங்களுக்கும் பொதுவானது. இதனைத் தெய்வப் புலவர் துளசிதாஸரும் தம் கவிதையில் கூறுகின்றார் :—

**ब्यापक एक ब्रह्म अबिनासी ।**
**सत चेतन घन आनँद रासी ॥**
**आदि अंत कोउ जासु न पावा ।**
**मति अनुमान निगम जसु गावा ॥**
**बिनु पद चलै, सुनै बिनु काना ।**
**कर बिनु करम करै बिधि नाना ॥**
**आननरहित सकल रस भोगी ।**
**बिनु बानी बकता बड़ जोगी ॥**
**तनु बिनु परस, नयन बिनु देखा ।**
**ग्रहै घ्रान बिनु बास असेखा ॥**
**अस सब भाँति अलौकिक करनी ।**
**महिमा तासु जाय किमि बरनी ॥**

"பிரமன் (கடவுள்) ஒருவனே எங்கும் நிறைந்தவன், அழிவற்றவன், யாதினும் உறைபவன், சேதனன், இன்ப வடிவானவன், இஞ்ஞான்றுவறை யாரும் அவன் தோற்றத் தையும் இறுதியையும் கண்டிலர். தம் எல்லைக்குட்பட்டே நான்மறைகளும் அவன் புகழைப் பாடியுள்ளன. பாதங் களின்றி நடக்கின்றனன்; காதின்றிக் கேட்கின்றனன்;

கரமின்றிக் காரியம் பல இயற்றுகின்றனன்; மூக்கின்றி முகர்கின்றனன்; நாவின்றி சொற்பொழிவாற்றுவதில் வல்லவன்; உடலின்றித் தொடுகின்றனன்; கண்ணின்றிக் காண்கின்றனன். இவ்வாறு அவனது அருள்வினைகள் அற்புதம். அவன் பெருமை உரைக்க வல்லதோ?"

## அத்தகைய கடவுளின் இருப்பினை அறிவதெப்படி?

அத்தகைய ஈசன் இருக்கிறன் என்பதை நான்மறைகளும் அறைகின்றன; அவனை நம் ஊனக் கண்கள் கொண்டு காணமுடியாதெனவும் வலியுறுத்துகின்றன:—

न संदृशे तिष्ठति रूपमस्य
न चक्षुषा पश्यति कश्चनैनम् ।
ज्ञानप्रसादेन विशुद्धसत्त्व-
स्ततस्तु तं पश्यते निष्कलं ध्यायमानः ॥

"ஆம், யாரும்ஈசனைக் கண்ணுல் காண்டல் அரிது; ஆனல் நம்மில் ஒவ்வொருவரும் தம் புல்லிய அவாக்களை உள்ளத்தினின்றும் பொசுக்கி அகற்றிய பின்னர் தமது தூய உணர்வின் வாயிலாக் அவனை உணர முடியும்.

ஆதலின் தம் அறிவுக் கண்களால் அவனைத் தரிசிக்க விரும்புவோர் முதலில் தமது உடலையும் உள்ளத்தையும் தூய்மைப் படுத்தவேண்டும், அறிவை வளர்க்கவேண்டும், பின்னர் ஈசனை நாடுதல் வேண்டும்."

## நாம் காண்பதென்ன?

நாம் பிறந்த நாள் தொடங்கி நிலையற்ற கூடாரம் போன்ற உடலை விட்டுப் பிரிந்து போகும் வரை நம்

உள்ளத்தைக் கிளரும் அதிசய அற்புதக் காட்சிகளைக் காண்கின்றோம்; அக்காட்சிகள் எவ்விதம் உண்டாகின்றன, பிறகு எவ்விதம் மறைகின்றன என்பதை அறிய ஆவல் எழும்புகின்றது. நாள்தோறும் காலையில் கீழ்த் திசையிலே ஆயிரக்கணகான கதிர்மாலைகளுடன் செஞ்ஞாயிறு தோன்றி வான வழியில் நடமாடி, ஒளியும் வெப்பமும் சக்தியும் உலகினுக்கு வழங்கி, மாலையிலே மேற்றிசையில் மறைகிறது. வானநூல் ஆராய்ச்சியாளர் சூரியன் பூமியிலிருந்து 9,28,30,000 மைல் தொலைவில் உள்ளனன் எனக் கணக்கிட்டுள்ளனர். இத்துணைத் தொலைவில் உள்ள கதிரவன் இப்பூமியில் உறையும் உயிரினங்கள் அனைத்திற்கும் ஒளியும் வெப்பமும் சக்தியும் வழங்குகின்ற அதிசயந்தான் என்னே! அவன் தனது கோடானு கோடிக் கதிர்கள் வாயிலாக பூமியின் பரப்பின் மீது உண்டாகும் ஈரத்தை உறிஞ்சுகின்றனன், அதனை மேகமாக மாற்றுகின்றனன்; மீண்டும் பூமிக்கே அவ்வீரத்தை மழையாகப் பொழிவிக்கின்றனன்; அதன் மூலம் புல்பூண்டு, செடி கொடி, மரம், பயிர் பச்சைகளுக்குக் சக்தி யளிக்கின்றனன்; உயிரினங்கள் அனைத்திற்கும் புத்துயிர் வழங்குகின்றனன். நம் கதிரவனினும் பன்மடங்கு பெரிய எண்ணற்ற கதிரவன்கள் வானத்தே உள்ளனர் என்று வான நூலார் கூறுகின்றனர். அந்தக் கோடானு கோடி நட்சத்திரங்கள் நாம் அறிந்திருக்கும் சூரியனைக்காட்டிலும் மிக மிகப் பெரியன வாயினும் கோடானு கோடி மைல் தொலைவில் இருக்கின்றபடியால் சிறு புள்ளிகள் போலக் காட்சியளிக்கிறன. மாலைதோறும் சூரியன் மூழ்கியதும் பரந்த விண்ணிலே கணக்கற்ற நட்சத்திரங்களும் கிரகங்

களும் துணைக்கிரகங்களும் மின்னுவதைக் காண்கின்றோம். இரவில் வெண்ணிலா சூரியனைப்போல கிழக்கிலிருந்து மேற்குவரை சஞ்சரித்துத் தனது அமுதக்கிரணங்களைப் பொழிந்து பூமியைப் பொன்னுலக மாக்குகின்றது, தனது இனிய, தண்ணிய கதிர்களைப் பொழிந்து உயிர்களை இன்பக்கடலில் ஆழ்த்தி வானவீதிகளிலே மிதந்து செல் கிறது. இருள் சூழ்ந்த இரவுகளில் நாம் காணும் அடி வான வட்டத்தில் எண்ணிறந்த கதிரவர்கள் தமது முத் தொளிகளை வீசி அழகுபடுத்துவதை வருணிக்கத் தான் முடியுமோ? இவ் விண்மீன்கள் அனைத்தும் ஒரே நூலில் கோத்தன போன்று தத்தமது குறித்த மண்டலத்திலே நாள்தோறும், மாதந்தோறும், ஆண்டுதோறும் தவிர்க்க முடியாத விதிகளுக்குட்பட்டனவாகச் சுற்றிவருகின்றன. ஓர் குறித்த கோடையில் கதிரவனின் கதிர்கள் போதிய ஒளியுடனும் வெப்பத்துடனும் காய்ந்திடாவிடில் அடுத்த காரில் வேண்டிய மழை பொழிவதில்லை யென்பது உள் ளங்கை நெல்லிக்கனி. வேண்டிய மழை இன்றேல் போதிய தானிய விளைவும், கனிவிளைவும் கிட்டுவதில்லை என்பதும் வெள்ளிடை மலை. ஞாயிறே நமக்குத் தானிய மணிகள், பழங்கள் வடிவத்தில் உணவு வழங்குகின்றான் என்பதும் தெளிவு. இவ்வமைப்பு முழுவதையும், அசைவன அசையா தன யாவற்றையும் பிறப்பித்துக் காத்தளித்துப்பின் அழிப் பது ஏதோ ஓர் ஞானமயக் கொள்கையின் திருவிளையாடலா அல்லது பொருளணுக்களின் தற்செயல் கூடுதலின் விளைவு தான் இவ்வேலையா என்ற கேள்வி பிறக்கின்றது. கதிரவன் குடும்பத்தைச் சார்ந்த இவ்வதிசயச் கோளங்களின் இனம் ஈர்ப்புச் சக்தியால் தோன்றியதா? பிற தூண்டுதல் இன்

றியே வானப்பரப்பிலே ஆண்டுதோறும் நூற்றுண்டுகள் தோறும், ஊழிதோறும் சுழன்றுவரும் வான உருண்டைகள் சைதன்யமற்றதொரு ஈர்ப்புச்சக்தியின் தற்செயல் நிகழ்ச்சியால்தான் தோன்றினவா அல்லது ஓர் ஞானமயக் கொள்கையே அவற்றினைச் சிருஷ்டித்து இயக்குகின்றதா ? பின்னைய அநுமானமே நம் அறிவுக்கு விருப்பமாக வுள்ளது. நமது பகுத்தறிவின் துணிவினுக்கு நான்மறைகளும் ஆக்கம் அளிக்கின்றன. கதிரவனையும், நிலவையும், வானத்தையும், பூமியையும் கடவுளே சிருஷ்டித்தருளினன் என அவை முறையிடுகின்றன :—

सूर्याचन्द्रमसौ धाता यथापूर्वमकल्पयत् ।
दिवं च पृथिवीं चान्तरिक्षमथो स्वः ॥

## உயிரின் பரிணமம்

அதுபோன்றே உயிரினங்களின் பரிணமமும். பிரபஞ்சத்தைத் தோற்றுவித்தவன் கடவுளே என நான்மறைகளும் மெய்ப்பிக்கின்றன. இந்த உயிருலகம் எண்ணிறந்த அற்புதங்களால் நிறைந்தது. மனிதன், சிங்கம், யானை, குதிரை, பசு முதலிய பாலூட்டுவன, பறவைகள், முட்டையினின்று பிறப்பன, பேன்போன்ற மற்ற புழு பூச்சிகள், வியர்வை, அழுக்கு போன்ற கழிபொருளில் வளர்வன, மரஞ்செடி கொடிகள், மண்ணில் முளைப்பன—இவை யாவற்றின் பிறப்பு, வடிவம், வாழ்க்கை அனைத்தும் முற்றிலும் அற்புதம் வாய்ந்தவை. ஆணும் பெண்ணும் கூடும்போது நுண்ணிய உயிரணு ஆண் உடம்பினின்றும் கிளம்பிப் பெண் கருவுக்குள் நுழைந்து செல்கின்றது ; அஃது

ஆங்கே பெண்ணின் முட்டையணுவோடு கலந்து இயைகின்றது. இந்த இயைபு 'ஜீவன்' எனப்படுகின்றது. வேதங்கள் கூறுகின்றன :—

वालाग्रशतभागस्य शतधा कल्पितस्य च।
भागो जीवः स विज्ञेयः स चानन्त्याय कल्पते॥

மயிரின் நுண்ணிய முனையை நூறு கூறுகளாக்குக; அவற்றின் ஒரு கூறை எடுத்துக் கொள்க; அதனை மறுபடி நூறு கூறுகளாக்குக. இப்போது அந்த 'ஜீவனின்' நுட்பத்தை மதிப்பிடுக. நுண்ணினும் நுண்ணிது அச் 'சீவன்'. அச் 'சீவன்' தன் இயைபு ஏற்பட்ட விநாடி முதல் அவயவ உயிராகச் வளர்கின்றது. மருத்துவ விஞ்ஞான மாணவர்கள் நுண்மானி வாயிலாகப் பின் வரும் உண்மையைக் கண்டு பிடித்துள்ளனர்: ஓர் விந்துவின் துளியிலே லக்ஷக் கணக்கான உயிரணுக்கள் செறிந்துறைகின்றன; அவற்றில் ஒன்றே கருப்பைக்குள் நுழைந்து ஊடுருவிச் சென்று உறுதியாக உயிர் நிலைக்கப் பெற்றுக் கருவுயிராக வளரப் பெறுகின்றது. இவ்விதம் விந்துக் கலப்பு ஏற்பட்ட நொடியிலிருந்து 'ஜீவன்' தனக்குறிய போஷணைப் பொருள்களைக் குழல் போன்றதோர் அமைப்பின் வாயிலாகப் பெறுகின்றது; இதற்கேற்பப் பெண்ணின் உடலமைப்பு வாய்ந்துள்ளது. கருவுயிரானது வடிவில் பெருகுந்தோறும் கருப்பைக்குள் அதனைச் சுற்றிலும் சவ்வு போன்றதோர் உறைக்குள் திரவப்பொருளொன்றும் உருவாகின்றது; அக் கவசம் கருவுயிரைக் காயப்படுவதினின்றும் பாதுகாக்கின்றது. நுண்ணினும் நுண்ணியதான இக்கருப் பொருள், மயிரின் கூர் முனையின் பத்தாயிரத்தி

லொரு பாகத்தினும் சிறிய இந்த ஜீவப்பொருள் வளர்ந்து படிப்படியாக வடிவம் பெற்றுப் பெற்ரோரின் உருவ அவ யவப் படிமங்களைப் பெறும் சக்தியை எங்கிருந்து பெறு கின்றது? தாய்க் கருப்பையின் உள்ளே எந்தச் சக்தியின் உதவி கொண்டு அச்சிறு ஜீவப்பொருள் நிலைபெற்று வளர முடிகின்றது? கர்ப்பத்திலிருந்து குழந்தை வெளிவருவ தற்குச் சிறிது நேரத்திற்கு முன்னிருந்தே அன்னையின் திருமார்பிலிருந்து பால் கசியும் இவ்வதிசயக் காட்சிக்கு என்ன காரணங் கூறப்போகின்றீர்? மனிதன், மிருகங் கள், பறவைகள், புழு பூச்சிகள் மரஞ்செடி கொடிகள் உள்ளிட்ட உயிரினங்கள் அனைத்திற்கும் நேரத்தில் போஷணையளிக்கும் அந்தச் சக்தி யாது? பகலிலாயினும் இரவிலாயினும் செங்குத்தான சுவற்றின்மீது நுண்ணிய எறும்பு ஏறுகின்றதே, அதற்கு உதவுவது எந்தச் சக்தி? பெரியனவும் சிறியனவுமாகிய பல்வேறு உருவத்துப் பறவைகள் வரம்பற்ற வானப்பரப்பிலே ஒரு வழிகாட் டியும் ஆதரவு மின்றி உயரப்பறந்து செல்கின்றனவே, அவற்றிற்கு உறு துணையாக இருப்பது எந்தச் சக்தி?

ஆண் என்ன, பெண் என்ன, மனித இனங்களென்ன, பசுக்கள், சிங்கங்கள், யானைகள், புழு பூச்சிகள் என்ன, கணிதத்திற் கடங்காத பல்வேறு உயிர் வடிவங்கள் எவ்விதம் தோற்றுவிக்கப் பெற்றன? மனிதனுக்கு மனி தனே பிறப்பதெப்படி? சிங்கத்திற்குச் சிங்கம், குதிரைக் குக் குதிரை, பசுவுக்குப் பசு, மயிலுக்கு மயில், அன்னத் திற்கு அன்னம், கிளிக்குக் கிளி பெற்ரோர்களின் பிரதி யுருவம் பெற்றுப் பிறப்பதெப்படி? தெள்ளிய ஆலின்

சிறு பழத்தொரு விதை வானுற ஓங்கி மாபெரும் மரமாக வளர்வதெப்படி? அற்ப வித்துக்களினின்றும் எத்துணை வகை மரஞ் செடிகள் முளைத்து உயர்ந்தோங்கிப் பல்லாண்டுகள் வரை தமது இலை, தழை, மலர், தளிர், பழம், ரசம், தைலம், பட்டை, கட்டை ஆகிய பற்பல பொருள்களை உயிரினங்களுக்கு அன்போடு வழங்கிக் காக்கின்றன; இனிய சாறும் தசையும் பொருந்திய லக்ஷக் கணக்கான பழங்களை நாள் தோறும் உயிர்களுக்குத் தாவரங்கள் வழங்கிக் கொண்டிருக்கின்றன; அவை ஈரத்தையும் போஷணையையும் மண்ணிலிருந்து உறிஞ்சுகின்றன; காற்றினின்றும் மூச்சையும் உணவையும் கிரஹித்துக்கொண்டு காற்றில் ஒய்யாரமாக ஆடி அசைந்து நிற்கின்றன.

மேற் சொன்ன செயல்களை நிறைவேற்றுகின்ற அச் சக்தியைத் தரிசிக்க நாம் செய்யும் முயற்சியில் நமது பார்வையை நம் முன் உள்ள நாம் வசிக்கும் 'இல்லம்' கவர்கின்றது. அதில் நாம் நுழைய ஒரு பெரிய வாயில் உள்ளது. ஒளியும் காற்றும் நுழையப் பல சாளரங்கள் உள்ளன; இல்லத்தினுக்கு உள்ளே பெரிய தூண்களும், பிறை வளைவுகளும் உள்ளன. மாடமும் மாட முகப்புக்களும் உள்ளன; இல்லத்தினருக்கு இவற்றின் மூலம் வெய்யில், மழை இவற்றினின்றும் பாதுகாப்புக் கிடைக்கின்றது. அறை தோறும் வசிக்கும் மக்களின் இன்பங்களை நிறைவேற்ற வசதிகள் யாவும் செய்யப் பட்டிருக்கின்றன. வீட்டினின்றும் கழிநீர் கழியக் கழிகால்கள் உள்ளன. பருவமாற்றத்திற் கேற்ப வெவ்வேறு சௌகரியங்கள் இவ்வில்லத்தில் திரண்டுள்ளன; ஆதலின் வீட்டி

னருக்கு யாதொரு குறைவும் ஏற்படுவதில்லே. இங்கு உறையும் மக்களின் நலன்களுக்கேற்ப இத்தகைய சிறந்த இல்லத்தைக் கட்டியவன் கட்டிட நூலில் கை தேர்ந்த வன் என்று தோன்றுகின்றது. அச் சிற்பியை நம் கண்களால் காண இயலாமற்போயினும், அவன் இருப் பது உண்மை என்பதற்கு எண்ணிறந்த சான்றுகள் உள் ளன. இப்போது நாம் உடலாகிய யந்திரத்தை ஆராய் வோமாக.

உண்ணவும் அருந்தவும் வாய் உள்ளது; மெல்லுதற் குப் பற்களும் தாடைகளும் உள்ளன; உணவு இறங்க உணவுக்குழாய் உண்டு; அக்குழாய்க்குப் பக்கத்திலேயே மூச்சுவிடக் காற்றுக் குழாய் உண்டு; குடலில் உணவு அறையுள்ளது; ஆங்கு உட்கொண்ட உணவு ஜீரணமாதல், அன்ன ரசம் தன்மயமாதல் முதலிய தொழில்கள் நடை பெறுகின்றன.

ஜீரணமான அன்னரசம் இரத்தமாக மாறுகின்றது; அது இருதயத்திற்குச் சென்று திரள்கின்றது; அங்கிருந்து அது எண்ணிறந்த சுத்த ரத்த நாளங்கள் வழியாக உடலெங்கும் பாய்ந்து சென்று உடலின் எல்லாப் பாகங் களேயும் சீர்திருத்திப் புதுமைப்படுத்திச் சக்தி வழங்கி வருகின்றது. போஷணைக்கு உபயோகப்படாத மலத் தைக்கழிக்க மலக்குழாயும், பால் முதலிய திரவ உணவு களில் வேண்டாதனவற்றை மூத்திரமாக வெளிப்படுத்த மூத்திரக் குழாயும் உள்ளன. காண இரு கண்களும், கேட்க இரு காதுகளும், முகர இரு மூக்குச் சந்துக ளும், பணியாற்ற இரு கரமும், நடமாட இரு கால்

களும், மக்கட் பேற்றினுக்கு ஜனனேந்திரியமும் நமக்கு வாய்த்துள்ளன. இவ்வதிசய உடல் யந்திரம் பொருளணுக்களின் தற்செயல் கூட்டுறவால் தோன்றியதாக இருக்குமா? மேற்சொன்ன கட்டிடத்தைக் காட்டிலும் உடலமைப்பு நுண்ணிய வேலைப்பாடு உடையது; நாம் வாழும் கட்டிடத்தை அமைத்த சிற்பியைப் போன்றவனுலா அல்லது அவனினும் திறனும், அறிவும், வன்மையும் பொருந்திய மற்றொரு சிற்பியாலா இவ்வுடல் ஆக்கப்பட்டது?

## மனம், சொல் இவற்றின் அற்புதச் சக்திகள்

இவ்விதமாக ஆராய்ந்து கொண்டிருக்கும் போது நமது எண்ணம் மனத்தினைக் குறித்துச் செல்கின்றது; அப்போது மனம் ஓர் அற்புதமான, ஒப்பற்ற சிற்பியின் அதிசயச் சிற்பத்திறனின் எடுத்துக் காட்டாகக் காட்சியளிக்கின்றது. உய்த்துணருந்திறன், இயற்றுதிரன், உணர்ந்துறுதிப்படுத்துந்திறன், பொருளறியுந்திறன், பொருளறிய ஆழப்புகுந்திறன் ஆகிய பல் வேறு திறன்கள் மனதிற்குள்ளன; இவை யாவும் திடுக்கிடச் செய்கின்றன. மேற் கூறிய திறன்களின் ஈடுபாட்டினுல் இத்துணைச் சிறந்த நூல்கள் இயற்றப்பட்டுள்ளன, இத்துணைக் காவியங்கள் ஆக்கப்பட்டுள்ளன, பல விஞ்ஞானங்கள் உருவாக்கப்பட்டுள்ளன. இத்துணை விஞ்ஞானப் புதுமைகள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன, இன்னும் கண்டு பிடிக்கப்பட்டு வருகின்றன. எத்துணை ஆச்சரியம் இது! நமது பேசுந் திறனும் சொல்த் திறனும் குரல் பண்புகளும் அற்

புதம் வாய்ந்தவை. இவ்வையத்தின் ஒவ்வொரு பகுதியிலும் ஓர் நோக்கப்பாடு இயல்வதைக் காண்கின்றோம். எதுவும் அர்த்தமற்ற சிருஷ்டியாக இருக்கவில்லை. மலை, ஆறு முதலியவற்றின் சிருஷ்டி அர்த்தமற்றதல்ல; அவற்றின் பிறப்பிலும் இயக்கத்திலும் ஓர் பரம சங்கற்பம் உள்ளது. ஓர் உத்தேசத்தின்படியே எப்பொருளும் இயற்றப்பட்டது போல் தென்படுகின்றது. மேலும், இச் சிருஷ்டியின் தோற்றமும் இறுதியும் காணமுடியவில்லை. பல் வேறு உயிரினங்களின் அவயவங்கள் சமநிறையோடு, அழகுபடச் சிருஷ்டிக்கப்பட்டுள்ளன. இதைக் காணுந்தோறும் கரைகாணு ஆச்சரியத்தில் மூழ்குகின்றோம். இவ்விதமாகப் பிரபஞ்சம் தோன்றியதிலிருந்து பருவந் தோறும் ஊழி தோறும் அற்புதச் சக்தி யொன்று இயங்கிவருகின்றது. அவ்வியக்கம் பல்லூழி காலம் நிகழும் என்பதும் தெளிவாகின்றது.

நம் அறிவு பின்வரும் முடிவு பெற நம்மை வற்புறுத்துகின்றது :—நோக்கப்பாட்டினைத் தன்னுட்கொண்ட இச் சிருஷ்டியானது, மூலப் பொருள், நிலைபேறுள்ள பொருள், பிறவாப்பொருள், அழியாப்பொருள், எங்கும் நிறை பொருள், எல்லையற்ற சக்திப்பொருள், இருப்பும் உண்மையும், இன்பமுமாகிய சச்சிதாநந்தப் பொருள் ஆகியவற்றைத் தன்னுள் பெற்றுள்ளது. வருணித்தற்கரிய அப் பரம சக்திக்கு ஈசன், பரமேசன், பரப்பிரம்மன், நாராயணன், பகவன், வாசுதேவன், சிவன், ராமன், கிருஷ்ணன், விஷ்ணு, ஜிகோவா (Jehovah), காட் (God), அல்லா இன்னும் பல பல்லாயிர நாமங்கள் வழங்குகின்றன.

## ஒரே கடவுள் தான் உண்டு

வேதங்கள் விள்ளுகின்றன :—

**एकमेवाद्वितीयम्। एकं सद्विप्रा बहुधा वदन्ति। एकं सन्तं बहुधा कल्पयन्ति।**

"ஒரே கடவுள் உண்டு, ஒன்றைத் தவிற மற்ற கடவுள் இல்லை; அறிவுடையோர் அவனைப் பல்வேறு பெயரிட்டு அழைக்கின்றனர்; அவனைக் குறித்துப் பல் வேறு கருத்துக்களை மக்கள் கொண்டுள்ளனர்."

இவ் வுண்மைக்கு விஷ்ணு சஹஸ்ரநாமமும் சிவ சஹஸ்ரநாமமும் சிறந்த எடுத்துக்காட்டுகளாகும். யுதிஷ்டிரர் தமது பாட்டனர் பீஷ்மரைக் கேட்டார்— "இரண்டற்ற ஒரே கடவுள் யாவன்? எல்லா உயிரினங்களுக்கும் நிகரற்ற புகலிடம் எது? யாரைப் போற்றிப் புகழின் மனிதனுக்கு எல்லையற்ற இன்பம் எய்தும்?"

இக் கேள்விக்கு பீஷ்மர் விடையிறுத்தார் :—

**जगत्प्रभुं देवदेवमनन्तं पुरुषोत्तमम्।**
**स्तुवन्नामसहस्रेण पुरुषः सततोत्थितः॥**

❀ ❀ ❀

**अनादिनिधनं विष्णुं सर्वलोकमहेश्वरम्।**
**लोकाध्यक्षं स्तुवन्नित्यं सर्वदुःखातिगो भवेत्॥**

❀ ❀ ❀

**परमं यो महत्तेजः परमं यो महत्तपः।**
**परमं यो महद्ब्रह्म परमं यः परायणम्॥**
**पवित्राणां पवित्रं यो मङ्गलानां च मङ्गलम्।**
**दैवतं देवतानां च भूतानां योऽव्ययः पिता॥**

"காலைதோறும் படுக்கையினின்றும் விழித்தெழுந்ததும் உலகமனைத்திற்கும் தலைவனான விஷ்ணுவை ஒவ்வொருவனும் புகழவேண்டும்; அவனே பரம்பொருள், நிலைபெற்றவன், புருஷோத்தமன். பரம்பரனும், பிரபஞ்சத்தை ஆளுபவனும், எங்கும் நிறைந்தவனும், பிறப்பிறப் பற்றவனுமாகிய விஷ்ணுவைத் துதிப்பவன் பிறவித் தொல்லைகளினின்றும் விடுபடுகின்றான். அவன் ஒளிப்பொருள்கள் யாவற்றினும் ஒளிபொருந்தியவன்; தவசிகளில் சிறந்த தவசி அவனே; மேன்மையரில் மேன்மையன்; எல்லா வுயிர்களுக்கும் அருள் நிறைந்த புகலிடம். அவன் தூயவரில் தூயவன், மங்களத்தினும் மங்களத்தினன். தெய்வங்களிற் சிறந்த தெய்வத் தன்மையினன் அவனே. சிருஷ்டிப் பொருள்கள் யாவற்றினுக்கும் அழியாத் தந்தை அவனே."

மேற்கூறிய மேற்கோள்களிலிருந்து நாம் அறிவதென்னவெனில் விஷ்ணுசஹஸ்ரநாமமும் சிவ சஹஸ்ரநாமமும் ஏனைய கடவுள்ப் புகழ்த் திரட்டுக்களும் மாற்றில்லாத ஒரே கடவுளைப் புகழ்கின்றன. ஆதலால், காலையிலும் மாலையிலும் நம் மனதை அக் கடவுளின்பால் செலுத்தி அவனையே போற்றிப் புகழ்தல் நம் கடமையாகும்.

## ஒருவனே எனினும் அவனுக்கு முப்பெயர்

அக்கடவுளைப் பிரமன், விஷ்ணு, சிவன் என முப்பெயர் கொண்டழைக்கின்றோம். விஷ்ணு புராணம் புகல்கின்றது:—

सृष्टिस्थित्यन्तकरणीं ब्रह्मविष्णुशिवाभिधाम् ।
स संज्ञां याति भगवानेक एव जनार्दनः ॥

பகவான் ஜநார்த்தனன் பிரபஞ்சத்தைப் படைக்குங் கால் பிரமன் என்றும், அதனைக் காக்குங்கால் விஷ்ணு வென்றும், அழிக்குங்கால் சிவன் என்றும் அழைக்கப்படு கின்ருன்.

இதே கருத்து பிருகந்நாரதீய புராணத்திலும் எதிரொலிப்பதைக் காண்கின்ருேம்:—

नारायणोऽक्षरोऽनन्तः सर्वव्यापी निरञ्जनः।
तेनेदमखिलं व्याप्तं जगत् स्थावरजङ्गमम्॥
तमादिदेवमजरं केचिदाहुः शिवाभिधम्।
केचिद्विष्णुं सदा सत्यं ब्रह्माणं केचिदूचिरे॥

"நாராயணன் அழிவற்றவன், எல்லையற்றவன், எங்கும் உறைபவன், மாயையால் தீண்டப்படாதவன், அசைவன அசையாதன எல்லாவற்றையும் தன்னுள் அடக்கிக் கொண்டு முழுச்சிருஷ்டியிலும் நிறைந்திருப்பவன், என்றும் இளைஞன். அவன் ஆதிதேவன். அவனை ஒரு சிலர் சிவன் என்பர், ஒரு சிலர் ஊழியான் விஷ்ணுவென்பர், மற்றுஞ் சிலர் பிரமன் என்பர்."

சிவபுராணத்திலும் சிவபிரான் கீழ்க்கண்டவாறு அருளிச் செய்கின்ருர்:—

त्रिधा भिन्नो ह्यहं विष्णो ब्रह्मविष्णुहराख्यया।
सर्गरक्षालयगुणैर्निष्कलोऽयं सदा हरे॥
अहं भवानयं चैव रुद्रोऽयं यो भविष्यति।
एकं रूपं न भेदोऽस्ति भेदे च बन्धनं भवेत्॥

"ஓ விஷ்ணுவே! இப் பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்கள் புரிவதாலேயே நான் முறையே பிரமன், விஷ்ணு, சிவன் என்ற பெயர்கள்

பெற்றிருந்த போதிலும், வாஸ்தவத்தில் நான் எப்பொழுதும் பிரிக்கப்பட முடியாதவன். நானும், இப்போது நம்முடன் இருப்பவராகிய பிரமனும், இனி வரப்போகிற ருத்திரனும் எல்லோரும் ஒரே ரூபத்தவர்தான்; வெவ்வேறாகப் பிரியும் போது நமக்குக் கட்டுப்பாடுகள் உண்டாகின்றன.''

ஸ்ரீமத் பாகவதத்தில் பகவான் அருளுகின்றார் :—

अहं ब्रह्मा च शर्वश्च जगतः कारणं परम् ।
आत्मेश्वर उपद्रष्टा स्वयंदृगविशेषणः ॥
आत्ममायां समाविश्य सोऽहं गुणमयीं द्विज ।
सृजन् रक्षन् हरन् विश्वं दध्रे संज्ञां क्रियोचिताम् ॥

" நானும், சிவனும், பிரமனும் பிரபஞ்சத்தின் மூல காரணர். நான் பிரபஞ்சத்தின் ஆத்மா ஆகின்றேன், யாவற்றிற்கும் தலைமையினன்; நானே காட்சி காண்பவன், நிகரற்றவன். பிரமனே! முக்குணங்கள் என்னும் எனது மாயைத் திரையைத் துளைத்து நான் பிரபஞ்சத்தினைச் சிருஷ்டித்துக்காத்து அழிக்கும் முத்தொழிலால் முப்பெயர்கள் ஏற்கின்றேன்.''

ஆதலின் பிரமன், விஷ்ணு, சிவன் மூவரிலும் வேற்றுமை நவிலக் கூடாது. முப்பெயர் கொண்ட ஒருவனே அப்பரமன். மேலும் சிவபுராணம் கூறுகின்றது :—

शिवो महेश्वरश्चैव रुद्रो विष्णुः पितामहः ।
संसारवैद्यः सर्वज्ञः परमात्मेति मुख्यतः ॥
नामाष्टकमिदं नित्यं शिवस्य प्रतिपादकम् ।

"சிவன், மகேசன், ருத்திரன், விஷ்ணு, பிதாமகன், பிரபஞ்ச மருத்துவன், யாதுமறிந்தவன், பரமாத்மன் ஆகிய இவ்வெட்டு நாமங்களும் சிவபிரானையே குறிக்கின்றன."

ஆதலின் 'ஓம் நமோ பகவதே வாசுதேவாய', 'ஓம் நமோ நாராயணாய', 'ஓம் நமச்சிவாய', 'ஸ்ரீராமாய நம:' 'ஸ்ரீ கிருஷ்ணாய நம:' எல்லாம் ஒரே கடவுளைக் குறித்துச் செய்யும் வந்தனைகளே என்பது மிகவும் தெளிவு.

## அக்கடவுள் எது போன்றுளான் ?

வேதங்கள் அவனைச் 'சத்யம் ஞானமநந்தம் பிரம்ம' (सत्यं ज्ञानमनंतं ब्रह्म) என்று முறையிடுகின்றன. ஸ்ரீமத் பகவத்கீதை அவனைப் பின் வருமாறு வருணிக்கின்றது :—

**विशुद्धं केवलं ज्ञानं प्रत्यक् सम्यगवस्थितम् ।**
**सत्यं पूर्णमनाद्यन्तं निर्गुणं नित्यमद्वयम् ॥**
**ऋषे विदन्ति मुनयः प्रशान्तात्मेन्द्रियाशयाः ।**
**ज्ञानमात्रं परं ब्रह्म परमात्मेश्वरः पुमान् ।**
**दृश्यादिभिः पृथग्भावैर्भगवानेक ईयते ॥**

"கடவுள் (பிரம்மம்) இருப்பது உண்மையே. அவன் முன்னர் இருந்தனன், இன்று இருக்கின்றனன், நாளையும் இருப்பவன். அறிவனைத்தும் அவனே, போதமனைத்தும் அவனே, இன்பமனைத்தும் அவனே. அவனுக்கெனத் தனி உடம்பில்லை; ஆதலின் பல்வேறு அநித்தியப் பொருள்கள் மூலமாக இப் பிரபஞ்ச நாடகத்தை நடத்திவருகின்றனன். அவன் முற்றிலும் தூயவன், ஞானவடிவன்,

தன்னிறைவினன், பூரணன், ஆதியும் அந்தமும் அற்றவன்; ஊழியான், நித்தியன், இரண்டற்றவன், ஒருவனே ஆயினும் அவன் பல வடிவங்களில் காட்சி யளிக்கின்றான்."

மற்றோரிடத்தில் அதே நூல் கூறுகின்றது:—

"அவன் புராணபுருஷன், தன்னொளியன், பிறப்பிலன், பரமேசன்; அவனே நாராயணன், பகவன், வாசுதேவன் என்ற பெயர்களால் அறியப்படுகிறவன். எப்பொருளிற்கும் உள்ளே அவற்றின் ஆன்மாவென நுழைந்துறைந்து தனது மயக்குறுத்தும் மாயைச் சக்தியின் பேருதவியால் தானே தோற்றிய ஒவ்வொரு வடிவத்தினையும் ஒளிப்படுத்தி வருகின்றனன்."

ஸ்ரீமத் பாகவதத்தின் இரண்டாவது ஸ்கந்தம் மூன்றாம் இயலில் வேதங்கள், உபநிடதங்கள், புராணங்கள் முதலியவற்றின் தலையான குறிக்கோளாகிய அப்பரப்பிரம்மத்தினைக் குறித்த நிறைவும் தெளிவும் பொருந்திய விளக்கம் காணக்கிடக்கின்றது.

ஜனகமன்னன் முனிவர்களை நோக்கிக் கூறுகின்றான்:—

"தவத்துறையீர்! நீவிர் தெய்வநூல் வல்லோரில் தலைசிறந்தவர். அன்பு கூர்ந்து நாராயணன் என்று அழைக்கப்படும் அப்பரமாத்மா பரப்பிரம்மனைக் குறித்துத் தக்க விளக்கந்தருக."

பிப்பலாய முனிவர் விடை பகர்ந்தார்:—

"மன்னவா! அப்பரம் பொருள் ஆதிகாரணன், நாராயணன். சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் என்னும் முத்

தொழிலுக்கும் பொறுப்பானவன். அவன் தன் பிறப்பிற்கு ஒரு மூலகாரணமு மில்லாதவன்; கனவு, விழிப்பு, உறக்கம் என்னும் முப்படிகளில் உள்ளும் புறமும் விடாப் பிடியாகப் புக்கு உறைபவன், பல்வேறு புலனுறுப்புக்கள், மூச்சுக் கருவிகள், இருதயம் முதலிய அவயவங்களைத் தத்தம் கடமைகளில் செலுத்தி உடலை ஊக்குகின்றவன்; நெருப்புப் பொரி தீப்பிழம்பினைத் துருவ இயலாதது போலவே நமது உள்ளம் சொல், கண்கள், அறிவு, மூச்சுறுப்புக்கள், புலனுறுப்புக்கள் எதுவாயினும் சரி, இவற்றுள் எதுவும் அம் முடிவற்ற ஆதிப்பரம் பொருளின் கொள்கையை உணர முடியாது; அதனருகில் அவை அணுகவும் முடியாது; அதனை விளக்கவும் முடியாது.

"அவன் என்றும் பிறந்திலன், என்றும் இறவான்; அவன் வளர்கின்றவனில்லை, என்றும் தன்னுருவில் குறைகின்றவனுமில்லை. பிறப்பிறப்புக்களின் மாறுதல்கள் அவனைத் தொடுவதில்லை. அவன் மாறுகின்ற நிலைகளை வேடிக்கை காண்பவன். காலந்தோறும் எங்கும் உறைபவன், அழிவற்றவன், ஞானமாத்திரன், அறிவினுக் கறிவானவன். வெவ்வேறு புலன்கள் வாயிலாக வெவ்வேறு பணிகளாற்றினும் பிராணன் ஒன்றே. எடுத்துக்காட்டாக கண்கள் காண்கின்றன, காதுகள் கேட்கின்றன, மூக்கு முகர்கின்றது, எனினும், பிராணன் வெவ்வேறு வடிவங்களில் காட்சியளிப்பது போலக் காண்கின்றது. அது போலவே ஆன்மாவும் ஒன்றே, எனினும் வெவ்வேறு வடிவங்களில் காட்சியளிக்கின்றது; ஏனெனில் அஃது வெவ்வேறு உடல்களின் வாயிலாகத் தன்னைப் புலப்படுத்திக்

கொள்கின்றது. கடவுள் ஒன்றே; சிருஷ்டி முழுவதிலும் அஃது எங்கும் உறைகின்றது. பாலூட்டும் உயிர்களான மனிதன், பசு, குதிரை, யானை, சிங்கம், நாய், ஆடு முதலியனவாயினும் சரி, பறவைகள் மற்ற முட்டையுயிர்களாயினும் சரி, உடலின் வியர்வை, அழுக்கு, கழிபொருள், ஆகியவற்றில் வளரும் புழுபூச்சிகளாயினும் சரி, மண்ணில் முளைத்தெழும் மரஞ்செடி கொடிகளாயினும் சரி, யாவற்றினும் ஒரு தன்மையதாகச் செறிந்துறைகின்றது கடவுள். பிராணன் இருக்கும் இடந்தோறும் அது சமநிறையில் ஏதேனும் ஓர் உருவில் உறைகின்றது. நம் புலன்கள் யாவும் உறக்க நிலையில் ஆழ்ந்த போதும் "நான் உள்ளேன்" என்ற தற்போதம் மூழ்கியபோதும் நிரந்தரக் காட்சிப் பொருளாக நம்முள்ளே வீற்றிருக்கும் ஓர் பொருளை நம் மனத்திரையில் கொண்டுவருகின்றோம். "நாம் நல்லுறக்கம் பெற்றிருந்தோம், இக்கனவு கண்டோம்" ஆகிய மொழிகளால் நாம் விழிக்கும்போது எப்பொருளைப் பற்றி நம்மையறியாமலேயே நினைவுப் படலத்தில் கொண்டுவர முயல்கின்றோமோ அதுவே பிரம்மம் அல்லது கடவுள்."

## கடவுளின் உறைவிடம் எது?

சுவேதாரண்யோபநிடதம் வேத சுருதி கூறுகின்றது:—

एको देवः सर्वभूतेषु गूढः
सर्वव्यापी सर्वभूतान्तरात्मा ।
कर्माध्यक्षः सर्वभूताधिवासः
साक्षी चेता केवलो निर्गुणश्च ॥

(ஸ்வேதாரண்யோபனிஷத் VI. II)

தொழிலுக்கும் பொறுப்பானவன். அவன் தன் பிறப்பிற்கு ஒரு மூலகாரணமு மில்லாதவன்; கனவு, விழிப்பு, உறக்கம் என்னும் முப்படிகளில் உள்ளும் புறமும் விடாப் பிடியாகப் புக்கு உறைபவன், பல்வேறு புலனுறுப்புக்கள், மூச்சுக் கருவிகள், இருதயம் முதலிய அவயவங்களைத் தத்தம் கடமைகளில் செலுத்தி உடலை ஊக்குகின்றவன்; நெருப்புப் பொரி தீப்பிழம்பினைத் துருவ இயலாதது போலவே நமது உள்ளம் சொல், கண்கள், அறிவு, மூச்சுறுப்புக்கள், புலனுறுப்புக்கள் எதுவாயினும் சரி, இவற்றுள் எதுவும் அம் முடிவற்ற ஆதிப்பரம் பொருளின் கொள்கையை உணர முடியாது; அதனருகில் அவை அணுகவும் முடியாது; அதனை விளக்கவும் முடியாது.

"அவன் என்றும் பிறந்திலன், என்றும் இறவான்; அவன் வளர்கின்றவனில்லை, என்றும் தன்னுருவில் குறைகின்றவனுமில்லை. பிறப்பிறப்புக்களின் மாறுதல்கள் அவனைத் தொடுவதில்லை. அவன் மாறுகின்ற நிலைகளை வேடிக்கை காண்பவன். காலந்தோறும் எங்கும் உறைபவன், அழிவற்றவன், ஞானமாத்திரன், அறிவினுக் கறிவானவன். வெவ்வேறு புலன்கள் வாயிலாக வெவ்வேறு பணிகளாற்றினும் பிராணன் ஒன்றே. எடுத்துக்காட்டாக கண்கள் காண்கின்றன, காதுகள் கேட்கின்றன, மூக்கு முகர்கின்றது, எனினும், பிராணன் வெவ்வேறு வடிவங்களில் காட்சியளிப்பது போலக் காண்கின்றது. அது போலவே ஆன்மாவும் ஒன்றே, எனினும் வெவ்வேறு வடிவங்களில் காட்சியளிக்கின்றது; ஏனெனில் அஃது வெவ்வேறு உடல்களின் வாயிலாகத் தன்னைப் புலப்படுத்திக்

கொள்கின்றது. கடவுள் ஒன்றே; சிருஷ்டி முழுவதிலும் அஃது எங்கும் உறைகின்றது. பாலூட்டும் உயிர்களான மனிதன், பசு, குதிரை, யானை, சிங்கம், நாய், ஆடு முதலி யனவாயினும் சரி, பறவைகள் மற்ற முட்டையுயிர்களாயி னும் சரி, உடலின் வியர்வை, அழுக்கு, கழிபொருள், ஆகிய வற்றில் வளரும் புழுபூச்சிகளாயினும் சரி, மண்ணில் முளைத் தெழும் மரஞ்செடி கொடிகளாயினும் சரி, யாவற்றினும் ஒரு தன்மையதாகச் செறிந்துறைகின்றது கடவுள். பிரா ணன் இருக்கும் இடந்தோறும் அது சமநிறையில் ஏதேனும் ஓர் உருவில் உறைகின்றது. நம் புலன்கள் யாவும் உறக்க நிலையில் ஆழ்ந்த போதும் "நான் உள்ளேன்" என்ற தற் போதம் மூழ்கியபோதும் நிரந்தரக் காட்சிப் பொரு ளாக நம்முள்ளே வீற்றிருக்கும் ஓர் பொருளை நம் மனத் திரையில் கொண்டுவருகின்றோம். "நாம் நல்லுறக்கம் பெற்றிருந்தோம், இக்கனவு கண்டோம்" ஆகிய மொழி களால் நாம் விழிக்கும்போது எப்பொருளைப் பற்றி நம்மை யறியாமலேயே நினைவுப் படலத்தில் கொண்டுவர முயல் கின்றோமோ அதுவே பிரம்மம் அல்லது கடவுள்."

## கடவுளின் உறைவிடம் எது?

சுவேதாரண்யோபநிடதம் வேது சுருதி கூறுகின்றது:—

एको देवः सर्वभूतेषु गूढः
सर्वव्यापी सर्वभूतान्तरात्मा ।
कर्माध्यक्षः सर्वभूताधिवासः
साक्षी चेता केवलो निर्गुणश्च ॥

(ஸ்வேதாரண்யோபனிஷத் VI. II)

"நம் அனைவருக்குள்ளும் ஒரே கடவுள் மறைந்திருக்கின்றான்; அவன் எல்லாப் பொருள்களிலும் நுழைந்திருக்கின்றான்; அவன் எப்பொருளுக்கும் உள்ளுயிர்; பிரபஞ்சத்தில் நடக்கும் நிகழ்ச்சிகள் அனைத்திற்கும் அவனே சூத்திரதாரி. அவன் எல்லா உயிர்களுக்குள்ளும் உறைபவன்; உலகச் செயல்கள் யாவற்றையும் பற்றற்றுப் பார்த்துக் கொண்டிருப்பவன். அவன் தனக்குத் தானே நிகர்; அவன் உலகின் அறிவு மயக் கொள்கை, முக் குணங்களால் தூய்மை கெடாதவன்."

தீ, நீர், காற்று, செடி, கொடி, பல்லுயிர்கள் முதலிய பிரபஞ்ச முழுவதிலும் கடவுள் அறிவுமயக் கொள்கையாக ஊடுருவி இருந்து வருகின்றான் என்று வேதங்களும், ஸ்மிருதிகளும் புராணங்களும் ஒரே குரலில் உறுதிப்படுத்துகின்றன.

சுருதி உரைக்கின்றது :—

एष देवो विश्वकर्मा महात्मा
सदा जनानां हृदये सन्निविष्टः ।
हृदा हृदिस्थं मनसा य एन-
मेवं विदुरमृतास्ते भवन्ति ॥

"பிரபஞ்சத்தின் சிருஷ்டி கர்த்தாவாகிய பரம்பொருள் உயிர்களின் இதயகமலங்களில் வீற்றிருக்கின்றது. தமது தூய உள்ளங்களின் உதவி கொண்டு தம் இதயங்களில் அப்பரம் பொருள் வீற்றிருத்தலை உணர்கின்றவர் அமர நிலை யெய்துகின்றனர்."

न तस्य कश्चित्पतिरस्ति लोके
न चेशिता नैव च तस्य लिङ्गम्।
स कारणं करणाधिपाधिपो
न चास्य कश्चिज्जनिता न चाधिपः॥

—சுவேதஸ்வாரோப நிடதம் 6, (9)

"அவன் எத்தலைமைக்கும் உட்பட்டவனல்லன்; எவன் ஆணைக்கும் கீழ்ப்படிபவன் அல்லன். அவனை இன்னான் என உணர அவனுக்கு எக்குறிகளும் இல்லை. அவனது மூலமு மில்லை, அவனைப் பிறப்பித்தவனுமில்லை; அவனைக் காப்பவனும் வேறில்லை."

तमीश्वराणां परमं महेश्वरं
तं देवतानां परमं च दैवतम्।
पतिं पतीनां परमं परस्ताद्
विदाम देवं भुवनेशमीड्यम्॥

"அதிகார பீடத்தில் இருப்பவர் அனைவருக்கும் அவன் மேலதிகாரி; கடவுளர்க் கெல்லாம் தலைமைக் கடவுள்; தலைவர்களுக்குத் தலைவன்; மூவுலகுக்கும் தலைவன் அவன்; யாவராலும் புகழ்தற் குரியவன் அவன்."

கோஸ்வாமி துளசிதாசர் கூறுகின்றார்:—

सोइ सच्चिदानंदघन रामा।
अज बिग्यानरूप बलधामा॥
व्यापक ब्याप्य अखंड अनंता।
अखिल अमोघसक्ति भगवंता॥
अगुन अदभ्र गिरागोतीता।
समदरसी अनबद्य अजीता॥

निरमल निराकार निरमोहा।
नित्य निरंजन सुखसंदोहा॥
प्रकृतिपार प्रभु सब उरबासी।
ब्रह्म निरीह बिरज अबिनासी॥
इहाँ मोह कर कारन नाहीं।
रबिसंमुख तम कबहुँ कि जाहीं॥

"இராமன் அப் பரம்பொருளானவன்; இருப்பெல்லாம் அவனே, அறிவெல்லாம் அவனே; இன்பமெல்லாம் அவனே; அவன் பிறப்பும் இறப்பும் அற்றவன்; தன் உட்கிடக்கையைத் தானே அறிபவன். அவன் சக்திக்களஞ்சியம்; எங்கும் நிறைந்தவன்; பகுக்கப் படாதவன்; வரம் பற்றவன்; தவருத சக்தியின் வடிவன்; யாவற்றிற்கும் தலைவன். குணமிலன், பரந்தவன்; புலன்கள், சொல் இவற்ருல் அணுகப்பெருதவன்; பொதுவானவன்; குற்ற மற்றவன்; வெல்லப் படாதவன்; கறை யற்றவன்; வடிவற்றவன்; அஞ்ஞானதில் மூழ்காதவன்; ஊழி தோறும் நிலைபெற்றவன்; மாயையால் தொடப்படாதவன் அவன். அவன் மகிழ்ச்சியின் திரட்சி; மூலப்பொருளாம் பிரகிருதிக்கும் அப்புறத்தவன். அவனே தலைவன், இதயந் தோறும் உள்ளுறைபவன், பற்றற்றவன், அவாவறுத்தவன், அழிவற்றவன், மோகமற்றவன். கதிரவன் முன் இருள் நிற்குமோ?"

அக்கடவுள் உயிர்தோறும் இதயங்களிலே உயிர் வடிவில் வாழ்கின்ருன்:—

ईश्वर अंस जीव अबिनासी।
चेतन अमल सहज सुखरासी॥

கீதையில் பகவான் பகர்கின்றார் :—

**ईश्वरः सर्वभूतानां हृद्देशेऽर्जुन तिष्ठति ।**

(XVIII. 61)

" ஓ! அர்ஜுனா! எல்லாவுயிர்களின் இதயங்களிலேயும் ஈசனே இருக்கின்றான்!" யாக்ஞவல்கியர் வேதங்களின் இக் குறிக்கோளைச் சுருக்கிக் கூறுகின்றார் :—

" ஒரு லக்ஷத்து நாற்பத்துநாலாயிர ஹித இரத்தநாளங்களும் (arteries) அஹித இரத்த நாளங்களும் (veins) ஒவ்வொரு மனிதன் இதயத்திலிருந்தும் பிரிந்து உடல் முழுவதும் பரவுகின்றன.

" அவற்றின் நடுவே நிலவுபோல ஒளி தரும் ஓர் மண்டலம் உள்ளது; அதன் நடுவே ஆன்மா வீற்றிருக்கின்றது; விளக்குப்போல அது ஒழுங்காக இடைவிடாது ஒளி வீசுகின்றது. அறியத் தகுந்த பொருள் அஃதொன்றே. பிறப்பிறப்பென்னும் இடையீடற்ற வட்டத்திலிருந்தும் அதன் அறிவே ஒருவனை விடுதலை செய்கிறது.

" அவ்வான்மா மனிதன், விலங்குகள், புழுபூச்சிகள், மரஞ்செடி கொடிகள் முதலிய பெரியனவும் சிறியனவுமாகிய எல்லா வுயிர்களிலும் ஒரே வடிவத்தில் உறைகின்றது."

ஸ்ரீ வேதவியாசர் அருள்கின்றார் :—

**ज्योतिरात्मनि नान्यत्र समं तत् सर्वजन्तुषु ।**
**स्वयं च शक्यते द्रष्टुं सुसमाहितचेतसा ॥**

"கடவுளின் ஒளி நமக்குள் உறைகின்றது; அது எல்லா உயிர்களிலும் சம நிலையில் ஒளிர்கின்றது; மனதை அடக்கிப் பக்குவப் படுத்தியபின் அம் மனக் கண் மூல மாகவே அவ் வாத்மாவை ஒருவன் காணமுடியும்."

ஸ்ரீமத் பகவத்கீதையில் பகவான் அருள்கின்றார்:—

**समं सर्वेषु भूतेषु तिष्ठन्तं परमेश्वरम् ।**
**विनश्यत्स्वविनश्यन्तं यः पश्यति स पश्यति ॥**

❀ ❀ ❀

**ज्योतिषामपि तज्ज्योतिस्तमसः परमुच्यते ।**
**ज्ञानं ज्ञेयं ज्ञानगम्यं हृदि सर्वस्य विष्ठितम् ॥**

(XIII. 27.17)

"உயிர்களின் இதயந்தோறும் கடவுள் உறைகின்றான்; அவன் அழிவனவற்றில் அழியாப் பொருளாக இருப்பவன்; இவ்வுண்மையை உணர்பவன் முனிபுங்கவனாகின்றான்.

"அக்கடவுள் ஒளிகளுக்கெல்லாம் ஒளி தருபவன்; அஞ்ஞான இருளுக்கப்பாலும் ஒளிர்பவன்; ஞானத்தின் சாரமானவன்; அறியப்படும் அறிவு அவனே; அவன் கரை காணாக் கழிவிரக்க முடையவன்; எல்லா இதயங்களையும் தன்னிடமாகக் கொண்டவன்."

இதயந்தோறும் வீற்றிருக்கும் அவ்வொப்பற்ற கடவுளைக் கலப்பற்ற பக்தியோடு தொழுதல் ஒவ்வொரு மாந்தரின் கடமையாகும். ஒவ்வொரு உயிரும் அக்கடவுளின் கோவில் என உணர்ந்து அதன்பால் மனிதன் அன்பு

செலுத்த வேண்டும். உயிர்கள் அனைத்தின் பாலும் நட்பு பாராட்டல் வேண்டும்.

பக்தர்கள் திலகமான பிரகலாதன் கூறுகின்றான்:—

ततो हरौ भगवति भक्तिं कुरुत दानवाः।
आत्मौपम्येन सर्वत्र सर्वभूतात्मनीश्वरे॥
दैतेया यक्षरक्षांसि स्त्रियः शूद्रा व्रजौकसः।
खगा मृगाः पापजीवाः सन्ति ह्यच्युततां गताः॥
एतावानेव लोकेऽस्मिन् पुंसः स्वार्थः परः स्मृतः।
एकान्तभक्तिर्गोविन्दे यत्सर्वत्र तदीक्षणम्॥

(பாகவதம் VII. vii. 53.55.)

"ஆதலின் தானவர்களே! ஸ்ரீ ஹரியைத் தொழுக; அவனே எல்லாவுயிர்களின் ஆன்மா ஆகின்றான், தலைவனுமாகின்றான். மற்றெல்லாவுயிர்களுக்கும் நம்மைப்போன்றே இன்பவுணர்வும் துன்பவுணர்வும் உள்ளதெனக் கொண்டு திருமாலை வணங்குக. அச்சுதப்பிரானைத் தொழுது தைத்யரும், யக்ஷரும், அரக்கரும், மாதரும், உழைப்பாளிகளும், பண்ணைகளில் வசிக்கும் இடையரும், என், மிருகங்களும், மேலும் பல அற்பப் பிராணிகளும் கூட அச்சுதனைத் தொழுது மோக்ஷ வீடு பெற்றிருக்கின்றனர். இவ்வுலகில் ஒருவன் பெறத்தக்க இன்றியமையாத குறிக்கோள் கோவிந்தனைத் தொழுதலும், உயிர்கள் யாவற்றினுள்ளும் அவன் உறைந்திருப்பதை அறிதலுமேயாம்."

## சனாதன தர்மத்தின் அடிப்படை

भगवान् वासुदेवो हि सर्वभूतेष्ववस्थितः।
एतज्ज्ञानं हि सर्वस्य मूलं धर्मस्य शाश्वतम्॥

" ஒவ்வொரு ஜீவனிலும் ஸ்ரீ வாசுதேவன் வசிக்கிறான் என்ற ஞானமே சனாதன தர்மத்தின் நிலைபெற்ற மூலக் கொள்கையாகும்."

கண்ணன் கீதையிலே இதே உண்மையை போதிக்கின்றான் :—

**समोऽहं सर्वभूतेषु...... ।** (IX. 29.)

"எல்லா உயிர்களிலும் பகுக்க முடியாதபடி நான் உறைகின்றேன்."

பகவான் மேலும் உரைக்கின்றார் :—

**विद्याविनयसम्पन्ने ब्राह्मणे गवि हस्तिनि ।**
**शुनि चैव श्वपाके च पण्डिताः समदर्शिनः ॥** (V. 18.)

"ஞானிகள் ஒருபால் அந்தணனையும் மற்றோர் பால் பசு, யானை, நாய், பறையன் முதலானோரையும் ஒரே நிரையிலேயே மதிக்கின்றனர்." யாவருக்கும் இன்பமும் துன்பமும் ஒரு மாதிரியே வருகின்றன என்பதை அவர்கள் உணர்ந்தனர் என்பது இதன் பொருள்.

பகவான் மேலும் அருள்கின்றார் :—

**आत्मौपम्येन सर्वत्र समं पश्यति योऽर्जुन ।**
**सुखं वा यदि वा दुःखं स योगी परमो मतः ॥** (VI. 32.)

"இன்பதுன்பங்கள் தனக்கு வருவன போலவே அனைவருக்கும் ஒரே மாதிரி வருகின்றன என்று உணர்வோனே யோகியர்க் கெல்லாம் மேலானவன்."

வேதவியாச முனிபுங்கவர் அருள்கின்றார் :—

**श्रूयतां धर्मसर्वस्वं श्रुत्वा चाप्यवधार्यताम् ।**
**आत्मनः प्रतिकूलानि परेषां न समाचरेत् ॥**

न तत् परस्य संदध्यात् प्रतिकूलं यदात्मनः ।
एष सामासिको धर्मः कामादन्यः प्रवर्तते ॥

"இதனை அறத்தின் சாரமென்றுணர்க; பின்னர் இதனைக் கைக்கொள்க. தனக்குப் பகையானதெனச் செய்யத் தகாததை—உனக்குச் செய்யப்படுமானல் நீ எதிர்ப்பதை—மற்றவர்களுக்குச் செய்யாதே. உனக்கு விருப்பமில்லாதவற்றை மற்றவர்களுக்குச் செய்யாதே. இதுவே தலையான அறம். மற்றக் கோட்பாடுகளெல்லாம் தன்னலம் வாய்ந்தன என்று உணர்."

जीवितुं यः स्वयं चेच्छेत कथं सोऽन्यं प्रघातयेत् ।
यद्यदात्मनि चेच्छेत तत् परस्यापि चिन्तयेत् ॥

"தான் வாழ விரும்பும் ஒருவன் பிறர் உயிரைக் கவரத் துணிவானே? ஒருவன் தனக்கெனச் செய்ய விரும்புவதையே பிறருக்கும் செய்வானாக."

அஹிம்சையும் சத்தியமும் பிறர் பொருளை ஒவ்வாமையும் ஆகிய மூன்நெறிகளும் அனைவருக்கும் விதிக்கப்பட்டுள்ளன. அந்த நெறிகளினின்றும் வழுவினல் விழுவது திண்ணம் இந்தக் கருத்தின் அடிப்படையின்தான் நாம் அறியாமலே பிறர் உயிரை மாய்க்கும் பாவத்திலிருந்து விடுதலையடையும் பொருட்டு வேதங்களின் மூலம் நமக்கு '**पंचमहायज्ञ**' என்ற ஐந்து பெரிய யாகங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றன. ஊன் தின்று வாழும் விலங்குகளும், பிறவுயிரைக் கொலை செய்பவரும், ஒரு பாவமும் செய்தறியாத மக்களின் உடமைகளைக் கவர்ந்தவரும், பிறர் அறவுணர்ச்சிகளைத் தாக்கியவரும், நம்மைத் தாக்கியவரும், நம் நாட்

டையோ கிராமத்தையோ தாக்கியவரும், தீ மூட்டியவரும் கலக மூட்டியவரும், நஞ்சு ஊட்டுபவரும் கொடியோர் எனப் பாகுபடுத்தப் பட்டுள்ளனர். ஆதலின் தற்காப்புக் காகத் தேவையேற்படும்போது அத்தகைய கொடிய மக்களை அல்லது விலங்குகளைக் கொல்லுதல் கடமையாகின்றது; நமது உடன் பிறந்தான் அல்லது உடன் பிறந்தாள் இவர்களின் உடலையும் கௌரவத்தையும் பாதுகாக்கும் பொருட்டுக் கொடியோரைத் தேவைப்படும் போது கொல்லுதலும் நம் கடமையாகின்றது. எனினும், ஒரு தவறும் இழைக்காதக உயிர்களைக் கொல்லுதல் மாபெரும் பாபமாகும். மேற்கூறிய கோட்பாட்டையனுசரித்தே வேத காலந்தொட்டு இன்று வரை ஒரு தீங்கும் செய்தறியாத, உலகத்திலுள்ள எல்லா உயிர்களிடம் அருள்க் கொள்கை பூண்டு ஹிந்துக்கள் ஒழுகி வருகின்றனர். மனிதருக்குத் தனது ஒப்பற்ற பாலை வழங்கியும் பிற வழிகளிலும் அவர்களுக்குப் பல நன்மைகளை அளித்து வருகின்ற காரணத்தால் பசுவை ஹிந்துகள் லோகமாதாவாகப் போற்றித் தொழுது வருகின்றனர். ஆகையால் தான் இந்த மிக உபயோகமான பிராணியைப் பேணி வளர்த்தல் ஒவ்வொரு மானிடனின் கடமையாகிறது. ஹிந்து தர்மத்தின் அடிப்படைக் கொள்கைப்படி தீமை செய்யாத உயிரை வாங்குவதும், ஒருவரின் உடமையையோ உயிரையோ கவர்வதும், அவர்களுக்கு வேறு எத்தீங்கும் புரிவதும், மோசம் செய்வதும் கொடிய தீவினைகளென விலக்கப் பட்டுள்ளன. தன்னைப்போலவே இன்ப துன்ப உணர்ச்சி யுடைய, தன்னேடு வாழ்கிற பிற மக்களுக்கு ஏதேனும் தொண்டு புரிவதும், செய்ந் நன்றிக்குப் பதில் நன்றி செய்வதும் எக்

காலத்திற்கும், எப்பருவத்திற்கும் உண்மையான நெறி யாகும்.

மேற்சொன்ன நீதிக் கேற்ப, வைதிக தர்மத்தைப் பின்பற்றுவோர் மனிதனுக்கு மட்டுமல்லாது, பறவைகளுக்கும் மிருகங்களுக்கும் மற்ற எல்லா உயிர்ப்பிராணிகளுக்கும் 'பலிவைசுவதேவம்' என்ற சடங்கு மூலமாக உணவளித்தல் வேண்டும் எனக் கட்டளையிடப்பட்டுள்ளனர். இவ்விஷயம் கீழ்க்கண்டுள்ள சுலோகங்களிலிருந்து நன்கு புலப்படும்:—

ततोऽन्यदन्नमादाय भूमिभागे शुचौ पुनः।
दद्यादशेषभूतेभ्यः स्वेच्छया तत् समाहितः॥

देवा मनुष्याः पशवो वयांसि
सिद्धः सयक्षोरगभूततङ्घाः।
प्रेताः पिशाचास्तरवः समस्ता
ये चान्नमिच्छन्ति मया प्रदत्तम्॥

पिपीलिकाः कीटपतङ्गकाद्या
बुभुक्षिताः कर्मनिबन्धबद्धाः।
प्रयान्तु ते तृप्तिमिदं मयान्नं
तेभ्यो विसृष्टं सुखिनो भवन्तु॥

भूतानि सर्वाणि तथान्नमेत-
दहं च विष्णुर्न ततोऽन्यदस्ति।
तस्मादहं भूतनिकायभूत-
मन्नं प्रयच्छामि भवाय तेषाम्॥

चतुर्दशो भूतगणो य एष
तत्र स्थिता येऽखिलभूतसङ्घाः ।
तृप्त्यर्थमन्नं हि मया विसृष्टं
तेषामिदं ते मुदिता भवन्तु ॥
इत्युच्चार्य नरो दद्यादन्नं श्रद्धासमन्वितम् ।
भुवि भूतोपकाराय गृही सर्वाश्रयो यतः ॥

"மற்ற வேள்விகளை இயற்றிய பின்னர் ஓர் கிருஹஸ்தன் தனக்கு எவ்வளவு விருப்பமோ அவ்வளவு இன்னும் அதிக அன்னம் எடுத்துச் சுத்தமான தரையில் வைத்துச் சாந்தமான சித்தத்தோடு பின்வரும் சொற்களைக் கூறி எல்லா உயிர்களுக்கும் வழங்குதல் வேண்டும் :—

'தேவர்கள், மாந்தர், விலங்கினம், பறவைகள், சித்தர்கள், யக்ஷர்கள், நாகர், மற்றும் ஊர்வன, நடப்பன, பிரேத பிசாசுகள், மரங்கள், எறும்புகள், புழு பூச்சிகள், மற்றும் பல உயிரினங்கள், இவைகளில் யார் யார் சென்ற வினைகளின் விளைவால் பட்டினி கிடந்து என்னிடம் அன்னம் வேண்டுகின்றனரோ அத்துணை உயிர்களும் இதைச் சாப்பிட்டு உள்ளங் குளிர்வாராக. மேற் சொன்ன ஜீவன்களும், நான் இட்ட இவ்வன்னமும், நானும் திருமாலே யன்றி வேறில்லை ; அவனைத் தவிர எமக்குத் தனி இருப்பில்லை. இவ்வன்னம் எல்லா உயிர்களின் ஓர் பாகம் ; ஆதலால் தான் எல்லா உயிர்களாலுமே ஆன இந்த அன்னத்தை நான் அவ்வுயிர்களைக் காப்பதன் பொருட்டு அளிக்கின்றேன்.' ஏனெனில் கிருஹஸ்தனே எல்லா உயிர்களுக்கும் முதுகெலும்பு போன்றவன்." கிருஹஸ்தன் பிறகு அந்த எல்லா உயிரினங்களின் பொருட்டும் அன்புடன் அன்னத்தைத்

தரையில் இட வேண்டும். மேற்சொன்ன கொள்கைப்படி சனாதன தர்மத்தினர் தினந்தோறும் தர்ப்பணம் செய்யும் போது தனது மூதாதையரை மகிழ்விப்பதோடு நில்லாமல் பிரபஞ்ச உயிர்க் கோடிகள் யாவற்றையும் மகிழ்வித்தல் வேண்டும். பின்வரும் சுலோகங்களின் ஒப்பற்ற கருத்துக்கள் நன்கு சிந்திக்கத் தக்கவை :—

देवासुरास्तथा यक्षा नागा गन्धर्वराक्षसाः।
पिशाचा गुह्यकाः सिद्धाः कूष्माण्डास्तरवः खगाः॥
जलेचरा भूनिलया वाय्वाधाराश्च जन्तवः॥
प्रीतिमेते प्रयान्त्वाशु मद्दत्तेनाम्बुनाखिलाः॥
नरकेषु समस्तेषु यातनासु च ये स्थिताः।
तेषामाप्यायनायैतद्दीयते सलिलं मया॥
येऽबान्धवा बान्धवा येऽन्यजन्मनि बान्धवाः।
ते सर्वे तृप्तिमायान्तु ये चास्मत्तोयकाङ्क्षिणः॥

"தேவர், தைத்யர், யக்ஷர், கந்தர்வர், அரக்கர், பிசாசர், குஹ்யகர், சித்தர், குசுமாந்தர், மரங்கள், பறவைகள், நீர்வாழ்வன, காற்றில் வசிப்பன, யாவரும் நான் வழங்கும் நீரினல் மகிழ்வடைவாராக. பற்பல நரகங்களில் வேதனைப்பட்டுக் கொண்டிருக்கும் உயிர்களின் பரிகாரத்திற்காகவும் இந்நீரை வழங்குகின்றேன். என் இரத்தத் தொடர்பு உடையோராயினும் சரி, அல்லது வேற்றோராயினும் சரி, எனது முன்னைய பிறவிகளில் உறவினராயிருந்தவராயினும் சரி, எனது நீர்க்கொடையை எதிர் பார்க்கும் எத்தகையவராயினும் சரி, அனைவருக் கும் நான் உள்ளன்புடன் இந்நீரை வழங்குகின்றேன்."

காகங்களுக்கும் நாய்களுக்கும் ஒதுக்கியது போக எஞ்சிய உணவின் அளவு மற்ற உயிர்களை மகிழ்விக்கப் போதுமானதல்ல வெனினும், ஒவ்வொரு கிருஹஸ்தனும் பலிவைசுவதேவச் சடங்கினை இயற்றுதல் தவிர்க்க முடியாததென விதிக்கப்பட்டுள்ளது. ஏனெனில், மனிதன் மற்றெல்லாப் பிராணிகளுடன் உடன்பிறப்பு உறவில் இருக்கின்றான் என்ற உயர்ந்த கருத்தை இச்சடங்கு குறிப்பிடுகின்றது. தந்தைக் கடவுளின் அருளாட்சியின் கீழ் மற்றெல்லா உயிர்களுடனும் மனிதன் நேச உறவுகொள்ளும் பான்மை எங்கும் பரவுமாறு செய்தல் வேண்டும், அருள்க் கண்ணீர் போல அன்பாகிய ஈரம் எங்கும் பரவுதல் வேண்டும் என்ற தெய்வீக உன்னதக் கருத்துடன் இல்லறத்தானின் பலிவைசுவ தேவச் சடங்கு நடைபெறுதல் வேண்டும்.

இந்தக்கொள்கை எவ்வளவு பரந்த நோக்கம் உடையது, பக்ஷபாதமற்றது, யாவரும் ஏற்றுக்கொள்ளக்கூடியது என்பதை எவ்வளவு புகழ்ந்தாலும் போதாது. இதனை பகவான் வேதவியாசரும் 'எல்லா உயிர்களுக்கும் நன்மை செய்' என்ற கருத்தில் ஒன்றியவராய் ஓர் ஒப்பற்ற அருள் வாக்கின் மூலம் ஆமோதிக்கின்றார் :—

**सर्वे भवन्तु सुखिनः सर्वे सन्तु निरामयाः ।**
**सर्वे भद्राणि पश्यन्तु मा कश्चिद् दुःखभाग् भवेत् ॥**

"எல்லா உயிர்களும் சுகமும் மகிழ்வும் பொருந்தி வாழ்வார்களாக; எல்லோரும் இன்ப நாட்களையே காண்க; யாரும் துன்பத்தில் வீழற்க."

சனாதன தர்மத்தின் உயிரும் ஆத்மாவும் ஆன கிருஷ்ண பரமாத்மா அன்பைக் கிளர்த்துவதும் நம்பிக்கை ஊட்டு

வதுமான வசனங்கள் மூலம் மாந்தர் யாவருக்கும் அன்பழைப்பு விடுக்கின்றார் :—

सर्वधर्मान् परित्यज्य मामेकं शरणं व्रज ।
अहं त्वा सर्वपापेभ्यो मोक्षयिष्यामि माशुचः ॥

"மற்ற அறவழிபாடுகளை விடுத்து என்னையே சரணடைவாய். உன் பாவங்களிலிருந்து உன்னை விடுவிக்கின்றேன் ; கவலை கொள்ளாதே."

கண்ணன் மேலும் உரைக்கின்றான் :—

समोऽहं सर्वभूतेषु न मे द्वेष्योऽस्ति न प्रियः ।
ये भजन्ति तु मां भक्त्या मयि ते तेषु चाप्यहम् ॥
अपि चेत्सुदुराचारो भजते मामनन्यभाक् ।
साधुरेव स मन्तव्यः सम्यग्व्यवसितो हि सः ॥
क्षिप्रं भवति धर्मात्मा शाश्वच्छान्तिं निगच्छति ।
कौन्तेय प्रति जानीहि न मे भक्तः प्रणश्यति ॥
मां हि पार्थ व्यपाश्रित्य येऽपि स्युः पापयोनयः ।
स्त्रियो वैश्यास्तथा शूद्रास्तेऽपि यान्ति परां गतिम् ॥

"எல்லா உயிர்களுக்கும் நான் சமநிலையில் உள்ளவன். நான் யாரையும் வெறுப்பவனுமல்லன், விரும்புபவனுமல்லன். என்னைப் பக்தியுடன் தொழுபவர்கள் என்னில் உறைபவர்களாகிறார்கள். கொடிய பாவியும் என்னையே சார்வானாகில் நெறியுடையவனாகின்றான். அவன் பக்தியால் ஓர் நொடியில் முனிவனாகி நிலையான சாந்தி பெறுவது திண்ணம். அர்ஜுனா! என்னை வழுத்துபவன்பால் எத்தீங்கும் நாடாது என்பதை உணர். குந்தியின் செல்வா! பெண்ணினமும், வணிகரும், உழைப்பாளிகளும், பாவப்

பிறப்பினருங்கூட என்னிடம் புகல் பெறுவாராயின் மகோந்நத நிலை எய்துவர்.''

தெய்வீகமும் கொடைத் தன்மையும் பொருந்திய அறவழியை வகுத்தோர் வாழ்க! இத் தெய்வீக ஒளியால் வழி காட்டப்பெற்றவராய் அறத்தன்மை வாய்ந்த எல்லா அறிஞரும் தம் ஞானத்தைச் சீர்திருத்திப் பெருக்கிக் கொண்டவராய் ஊக்கம் மிகப் பெற்றவராய் மேற்கூறிய அறக்கொள்கையைப் பரப்ப முயல்வாராக; அங்ஙனம் பரப்பிக் கடவுள் ஒருவனே என்று உலகத்தின் முன் வலியுறுத்துவாராக; அவன் மனிதன்மட்டுமல்ல, தாவர, ஜங்கமப் பொருள்கள் யாவற்றினும் உறைகின்ருன், மனிதன், விலங்குகள், பறவைகள், புழு பூச்சிகள், மரஞ் செடி கொடிகள் யாவற்றிலும் வசிக்கின்ருன் என்ற உண்மையை உலகத்தினருக்கு அறிவிப்பாராக. எல்லா உயிர்களினுள்ளேயும் கடவுள் உறைகின்ருன்; ஆதலால் யாவர்பாலும் அன்பு பூண்டு சகோதரப் பான்மை கொள்ளுதலே சிறந்த தெய்வ வழிபாடு ஆகும் என எல்லோருக்கும் அறிஞர்கள் எடுத்துரைப்பாராக. இந்த தெய்விகச் சக்தியை உறுதிப் படுத்திப் பிரசாரம் செய்வோமாக; ஞானத்தைப் பரப்பி உலகம் அனைத்தின் பால் அன்பு செலுத்துவதைக் கைக்கொள்வோமாக. உலகினின்றும் அறியாமையை அகற்றுவோமாக, குற்றம் தவிர்ப்போமாக. அநீதியை அழிப்போமாக. மாந்தரிடையே வாய்மை, அறவாழ்வு, இரக்கம் முதலியவை போதித்து, பரஸ்பர நல்லெண்ணத்தையும் இன்பத்தையும் அமைதியையும் பரப்புவோமாக. இதுவே எனது ஆழ்ந்த வேண்டுகோள்.

---

